# திருக்குறள்

## செய்ந்நன்றியறிதல்:

- கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
  ஒன்றுநன் றுள்ளக் கெடும்.
- எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
  செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

## நடுவுநிலைமை:

- தக்கார் தகவிலர் என்ப தவரவர்
  எச்சத்தாற் காணப் படும்.
- கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
  கோடாமை சான்றோர்க் கணி.
- சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபால்
  கோடாமை சான்றோர்க் கணி.

## அடக்கமுடைமை:

- அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
  ஆரிருள் உய்த்து விடும்.
- செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து
  ஆற்றின் அடங்கப் பெறின்.
- ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்
  எழுமையும் ஏமாப் புடைத்து.
- யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
  சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.
- தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
  நாவினாற் சுட்ட வடு.

## ஒழுக்கமுடைமை:

- ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்
  உயிரினும் ஓம்பப் படும்.
- பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்
  தேரினும் அஃதே துணை.
- நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கந் தீயொழுக்கம்
  என்றும் இடும்பை தரும்.
- உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்
  கல்லா ரறிவிலா தார்.

## பிறனில் விழையாமை:

- பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
  இகவாவாம் இல்லிறப்பான் கண்.
- பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
  அறனொன்றோ ஆன்ற வொழுக்கு.
- அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
  பெண்மை நயவாமை நன்று.
- பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து
  அறன்பொருள் கண்டார்க ணில்.

## பொறையுடைமை:

- அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
  இகழ்வார்ப் பொறுத்தல் தலை.
- ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர் பொதிந்து
  பொறுத்தாரைப் பொன்போற்.
- ஒறுத்தார்க் கொருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
  பொன்றுந் துணையும் புகழ்.
- மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
  தகுதியான் வென்று விடல்.

## அழுக்காறாமை:

- ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து
  அழுக்கா றிலாத இயல்பு.
- அழுக்கா றுடையார்க் கதுசாலும் ஒன்னார்
  வழுக்கியுங் கேடீன் பது.
- அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
  தீயுழி உய்த்து விடும்.

## வெஃகாமை:

- நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
  குற்றமும் ஆங்கே தரும்.
- படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
  நடுவன்மை நாணு பவர்.
- சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
  மற்றின்பம் வேண்டு பவர்.
- வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்
  மாண்டற் கரிதாம் பயன்.

## புறங்கூறாமை:

- அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்
  புறங்கூறான் என்றல் இனிது.
- புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
  அறங்கூறும் ஆக்கந் தரும்.
- கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
  முன்னின்று பின்னோக்காச் சொல்.
- பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளுந்
  திறன்தெரிந்து கூறப் படும்.
- ஏதிலார் குற்றம்போல் தங்குற்றங் காண்கிற்பின்
  தீதுண்டோ மன்னு முயிர்க்கு.
- பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
  நட்பாடல் தேற்றா தவர்.
- அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்சொல்லும்
  புன்மையாற் காணப் படும்.